மலர் 6] [இதழ் 17
10—4—85
குரோதி ஆண்டு பங்குனி 28
"தமிழகம்" கிழமை இதழ்.
விலை — 10 காசுகள்.

# தமிழகம்

சிறப்பாசிரியர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்



அப்பர் விருந்து

## திருவருள் பெற

விடையேறும் வித்தகனாகவும், நச்சரவம் அணித்தவனாகவும், விரிசடை அண்ணலாகவும், அங்கையினில் அனலேந்தி இரவாடும் பெருமானாகவும் விளங்குகிற இறைவனைக் காணவேண்டுமா? அவன் திருவருளைப் பெறவேண்டுமா? நெஞ்சத்தே வஞ்சமின்றி, நிறைந்த அன்புடையராக—கருணை நெஞ்சினராக இருங்கள்! இறைவனை எளிதிற் காணலாம்; அவன் திருவருளை எளிதிற் பெறலாம்.

இறைவன் கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியன்; கரவார்பால்—உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத உத்தமர்தம் உள்ளத்தில் எப்போதும் கலந்து நின்று உறவாடிக் களித்து மகிழ்பவன். ஆம். கரவார்பால் விரவாடும் பெற்றியினன். இதனை அப்பரடிகள் எவ்வளவு அழகாகவும், தெளிவாகவும் கூறுகிறார் பாருங்கள்:

"கரவாடும் வன்னெஞ்சர்க்கு
அரியானை—கரவார்பால்
விரவாடும் பெருமானை
விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ
அங்கையினில் அனலேந்தி
இரவாடும் பெருமானை
என்மனத்தே வைத்தேனே!"



# குன்றைப் பதியும் மருது பாண்டியரும்

—தே. சொக்கலிங்கம். எம். ஏ.—

"குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே" என்பது தெய்வத் திருமுருகாற்றுப்படை. 'முருகன் குன்றுகளில் எல்லாம் விரும்பி விளையாடும் பண்புடையவன்' என்பதை இவ்வரி உரைக்கின்றது. அத்தகையன் குன்றைக் குடியிலும் வீற்றிருந்து அருள் சுரக்கின்றான். செட்டி நாட்டுக்கு நடு நாயகமாக விளங்குவது குன்றக்குடி. குன்றைச் செல்வன் திருவடி போற்றாத மக்கள் யாருமிலர். குன்றை முருகன் வரந்தரு வள்ளல். அவன் அருள் திக்கெலாம் பரவிய பெரும் புகழ். பெருமான் பேரளியால் நோய் நீங்கியவரும், பிள்ளைப் பேறு பெற்றவரும், பொருட் செல்வம் எய்தியவரும் கணக்கிலர். அரசன் ஆயினும் ஆண்டி ஆயினும் அவனுக்கு எல்லாரும் ஒரு மாதிரிதான். இப்பெருமானின் அருளால் மருதுபாண்டியர் உய்தி பெற்றனர். மருது பாண்டியர் திருப்பணியால் குன்றை முருகன் புகழ் மேலும் பரவியது.

முருகனுக்கு மருதுபாண்டியர் திருப்பணி செய்ததற்குக் காரணமே முருகன் அருள் விளக்கமாகும். மருதுபாண்டியரை அறியாத் தமிழர் எவருமிலர். வாணிகக் கொடி பிடித்து வந்த ஆங்கிலேயரை-நாடாளும் உரிமையில்லை என்று கூறிப் போரிட்டு உயிரீந்த பெருமக்கள் மருதுபாண்டியர் கி. பி. 1780 முதல் 1801 வரை சிவகெங்கைச் சீமையை ஆண்டனர். வளம் பொருந்திய ஆட்சிக் காலம் அவர்கள் காலம். அந்நாளில் ஈடு இணையற்ற பெரிய மருது இராசபிளவை என்னும் கட்டியால் பெரும் அல்லல் பட்டார். வாளுக்கு அஞ்சாத மறவன் நோயால் வாடினான். மருந்தும் மந்திரமும் நோய் நீக்க முடியாது தோல்வி எய்தின. பிளவை நோய் கொடிது. சாவையும் ஏற்படுத்தும் தகையது. இறைவன் அருள் பெற்ற பெரியவர்களால்தான் அந்நோய் போக்க முடியும் என்று பெரியவர்கள் சொன்னார்கள். இறையருள் பெற்ற அடியார் ஒருவர் அழைத்து வரப்பட்டார். குன்றை முருகனைக் குலக் கடவுளாகக் கொண்டவர் அவர் நாட்டுக் கோட்டை நகரத்தார் மரபினர். காடன் செட்டியார் என்ற பெயரினர். பெரிய மருதுவுக்குத் திருநீறு வழங்கினார். வழங்கி முருகனையே வேண்டி நோய் நீக்கம் செய்யுமாறு பணித்தார். தூங்காத மருது அன்று நன்கு துயின்றார். தூக்கத்தில் யோகி ஒருவர் மயிற் பீலியுடன் தோன்றி, அப்பிளவையின் வாயில், திருநீற்றை வைத்து மறைந்ததுபோலக் கனவு கண்டார். துயில் நீங்கிய பெரிய மருதுவிற்கு வலி குறைந்திருந்தது. நாளடைவில் பிளவை நோய் நீங்கி நலம் கிட்டிற்று.

அன்று தொட்டு, குன்றை முருகன்பால் மருதுபாண்டியர் பேரன்பு பூண்டு பெரும் பணி செய்ய முற்பட்டனர். குன்றக்குடி முருகன் கோயில் மலைக்கோயில் என்று சொல்லப்படும். கீழ்க்கோயில் என்பது சிவன் கோயிலாகும். கீழ்க் கோயில் மலைக்கோயிலினும் பழமையானது. மலைக் கோயில் கி. பி. 1600க்கு முன் இருந்ததாக உறுதி செய்வதற்குச் சான்றுகள் இல்லை. தொடக்கத்தில் ஆலயமாக (வேல் மட்டும் உள்ளது ஆலயம்) இருந்து, படிப்படியாகப் பெருங் கோயிலாக வளர்ந்திருக்க வேண்டும். முருகப் பெருமானுடைய கருவறை கி. பி. 1600இல் கட்டப்பட்டது என்று கூறுவர். வெளிக் கோவில்களில் கல்வெட்டுக்களைக் காண இயலாது. இவை, முதலியன பிற்காலத் திருப்பணி என்பர்.

மருது பாண்டியர், முருகப் பெருமானுக்கு அழகிய கோயிலும் முன்புற மண்டபமும் அமைத்தனர். முருகப்பெருமானுக்குச் சிறப்பாக அணிவிக்கப்பெறும் "பொற்கவசம்" சின்ன மருதுவின் திருப்பணியாகும். அப்பொற் கவசத்தில் சின்ன மருது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. மருது பாண்டியர், முருகன் கோயில் எந்திரத் தகடு, தலைகீழாக மாறியிருந்தமையை அறிந்தனர். அதனைத் தக்காரைக்கொண்டு தக்க வகையில் திருத்தித் திருப்பணி செய்தனர். நித்திய நைமித்திக வழிபாட்டிற்காகச் செம்பொன் மாரி முதலிய சிற்றூர்களை வழங்கினர். இவ் வீரச் சகோதரர்கள் முருகப் பெருமான் திருவுலாச் செய்தற்கு வெள்ளி மயில் ஊர்தி செய்து கொடுத்தனர். அந்த நன்னாளில் பெருமழை பெய்தது. இங்ஙனம் மருதுபாண்டியர் பலநூறு ஆயிரம் ரூபாய்களைச் செலவிட்டுத் திருப்பணி செய்தனர். குடமுழுக்கு சிறப்புற நடைபெற்றது.

குன்றக்குடி என்றால் மருது பாண்டியர் நினைவு வராமற் போகாது. முருகன் கோயி

(4-ம் பக்கம் பார்க்க)




— அடிகளார்

**கேள்வி:**

சமஸ்கிருதம் பேச்சு வழக்கழிந்து போனமைக்குக் காரணம் என்னவாக இருக்கலாம்?

**பதில்:**

பெரும்பான்மையான வரலாற்றாசிரியர்களின் கருத்துப்படி சமஸ்கிருதம் இந்தியாவுக்குள் மத்திய ஆசியாவிலிருந்து வந்த ஆரியர்களுடைய தாய்மொழி என்றே கருதப் பெறுகிறது. அவர்கள், இந்த நாட்டுக்கு வந்தவுடன் இந்த நாட்டின் பல்வேறு மாநிலங்களிலும் பரவிக் குடியேறினார்கள். அவ்வம் மாநிலத்து மொழியையே தத்தமது தாய் மொழியாக ஏற்றுக்கொண்டு, வாழத் தலைப்பட்டமையின் காரணமாக சமஸ்கிருதம் பேச்சு வழக்கில் இருந்து விலகிவிட்டது. சமஸ்கிருதம் 'செய்யப்பட்ட ஒரு மொழி' அதுவும் தமிழர்களாலேயே செய்யப்பட்ட ஒரு மொழி-சமய மரபுகளைப் புனிதமானதாகவும் மறை பொருளாகவும் வைத்துக் காப்பாற்றுவதற்கென்றே அம்மொழியைத் தோற்றுவித்துக் காப்பாற்றி வளர்த்ததாகச் சிலர் சொல்லுவார்கள்.

**கேள்வி:**

'பெர்மிட், லைசென்ஸ், கோட்டா வழங்குவதில் அரசுக்கு எவ்வித அதிகாரமும் இல்லாதவாறு நாட்டின் பொருளாதார இயக்கத்தைத் தனியாகப் பிரித்து வேறு இலாகாவிடம் ஒப்படைக்க வேண்டும்' என்று ராஜாஜி கூறுகிறாரே, அது பற்றித் தங்கள் கருத்தென்ன?

**பதில்:**

நாட்டின் தற்போதைய சூழ்நிலையில் இதனை ஆரோக்கியமான யோசனை என்று கருதுவதற்கில்லை.

**கேள்வி:**

கேரளாவில் ராஷ்டிரபதி ஆட்சியை நீடித்திருப்பது பாராளுமன்ற ஜனநாயக முறைக்கு முரணானது என்று டாக்டர் அரிகிருஷ்ண மெஹ்தாப் கூறியுள்ளது பற்றித் தங்கள் கருத்தென்ன?

**பதில்.**

ஜனநாயக மரபுப்படி தவறாக இருக்கலாம். ஆனாலும், பக்குவப்படாத ஜனநாயகத்தில்-நாட்டின் நலனுக்கு மாறுபட்ட சக்திகள் மேலோங்கி வருமானால் ஜனநாயகம் என்ற பெயரால் அதையும் அனுமதிக்க முடியுமா? அப்படி அனுமதிப்பது ஒரு தற்கொலை!

**கேள்வி:**

'ஆங்கில மோகத்தினால் தமிழின் வளர்ச்சிக்குத் தடை போடாதீர்கள்' என்று வினோபாஜி கூறியுள்ளாரே, அது பற்றித் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?

**பதில்:**

முற்றிலும் நியாயமானதே, நாம் தொடர்ந்து வலியுறுத்தி வருவதும் இக்கருத்தேயாகும்.

**கேள்வி:**

தி. மு. க. வின் வளர்ச்சி வேகமாக இருக்கிறதல்லவா?

**பதில்:**

அப்படி ஒன்றுமில்லை. காங்கிரஸ் கட்சியின் துரிதமான இயக்கங்கள் உட்கட்சிப் பூசல்களால் தடைபடுகின்றன. ஆதலால் தி. மு. க. வளர்வதுபோலத் தெரிகிறது.

**கேள்வி:**

இந்தி திணிக்கப்படவில்லை என்று மத்திய அரசு சொல்லிக்கொண்டே அஞ்சலகம், ரயில்வே துறை ஆகியவைகளில் இந்தி திணிக்கப்படுகிறதே.........

**பதில்:**

அரசின் மீது தவறல்ல-அங்கும் யாரோ ஓரிருவர் அவசரப்படுவோர் இருக்கிறார்கள் என்று தெரிகிறது.

# வாழ்விக்க வந்தோர் வரலாறு

## 38. விறண்மிண்டர்

சேரநன்னாடு பல்வகை வளங்களும் பாங்குறக் கொழிக்கும் திருநாடு. அந்நாட்டுவளத்தை, 'வாரி சொரியுங் கதிர் முத்தும், வயல் மென் கரும்பியற் படுமுத்தும் வேரல் விளையும் குளிர்முத்தும், வேழ மருப்பின் ஒளி முத்தும் மூரல் எனச்சொல் வெண்முத்த நகையார் தெரிந்து முறைநோக்கும் சேரர் திருநாடு' என்று செந்தமிழ்ச் சேக்கிழார் பாராட்டுகிறார். அந்நாட்டின் ஊர்களிலே சிறந்தது- தொல்புகழ் வாய்ந்தது செங்குன்றூர். 'அன்னம் பயிலும் வயலுழவின் அமைந்த வளத்தால் ஆய்ந்தமறை' சொன்ன நெறியின் வழியொழுகும் தூய குடிமைத் தலைநின்றார் மன்னும் குலத்தின் மாமறை நூல் மரபில் பெரியோர், பலர் வாழ்' திருப்பதி அச்செங்குன்றூர் அப்பொற்பதியில், வேளாண் குலத்தை விளக்க அவதரித்தவர் விறன்மிண்டர். அவர் செப்பற்கரிய சீர்த்தியினர்—அவர் சிவனார் செய்ய கழல்பற்றி எப்பற்றினையும் அறஎறிவார். மெய்யடியார்கள் பால் மிகப்பரிவுடையார். முன்னே திருத்தொண்டர்களை வணங்கிப் பின்னே சிவபெருமானை ஆம். 'நதியும் மதியும் புனைந்த சடை நம்பர் பிரானைப் பணிவனதை வழக்கமாகக் கொண்டவர். அவர் பொன்தாழ் அருவிமலைநாடு' கடந்து, பல திருப்பதிகளையும் தொழுது, திருவாரூரை வந்தடைந்தார். அங்கே ஒருநாள் செந்தமிழ்ச் சுந்தரர், தேவாசிரிய மண்டபத்தில் எழுந்தருளியுள்ள சிவனடியார் தம்மைத் தொழுது வந்தணையாது ஒதுங்கிச் சென்றதைக் கண்டார். கண்டதும், 'திருத்தொண்டர்களுக்கு வன்தொண்டனும் புறம்பு, அவனை ஆண்ட சிவனும் புறம்பு'என்றார். விறன்மிண்ட நாயனார் அடியவரிடத்துக் கொண்டுள்ள அன்புறுதியைக் கண்டு, நம்பியாரூரார் தம் கருத்து முற்றுப் பெறவும், ஞாலம் உய்யவும், சைவ நன்னெறியின் சீலம் உய்யவும் 'திருத்தொண்டத் தொகை'யைத் திருவாய் மலர்ந்தருளினார். அத்திருத்தொண்டத்தொகை, விறன்மிண்டருக்கு மட்டிலா மகிழ்வூட்டிற்று. 'தக்கவகையால் தம் பெருமான் அருளால். சிவபெருமானின் கணங்களுக்குத் தலைவராயிருக்கும் பெரும்பேற்றைப் பெற்றார்.

'குழந்தையைப்பாராட்டுவதன் மூலம், தாயை மகிழ்விப்பது போல, கவிதையைப் போற்றுவதன் மூலம் கவிஞனை மகிழ்விப்பது போல. ஓவியத்தைப் பாராட்டுவதன் மூலம் ஓவியனை மகிழ்வுறச் செய்வது போல அடியவர்களிடமும், உலக உயிர்களிடமும் அன்பு செலுத்துவதன் மூலம் உலகுக்குத் தாயும் தந்தையுமாக-அம்மையும் அப்பனுமாக இருக்கின்ற இறைவனை மகிழ்ச்சியுறச் செய்யமுடியும்' என்ற தவத்திரு அடிகளார் அவர்களின் கருத்துக்கு விறன்மிண்டர் வரலாறு தக்கதோர் எடுத்துக் காட்டாகும்.

---

### அடிகளார் உயர்நிலைப்பள்ளி புதிய கட்டிடக் கால்கோள் விழா

குன்றக்குடி, அடிகளார் உயர்நிலைப் பள்ளியின் புதிய கட்டிடத்திற்கு 5-3-65ல் தவத்திரு அடிகளார் அவர்கள் கால்கோள் செய்தார்கள். இக்கட்டிடத்தைக் கட்டி முடிக்க ரூ 1 லட்சத்து 40 ஆயிரம் செலவாகும் என்று மதிப்பிடப் பட்டிருக்கிறது. அரசாங்கம் உதவித் தொகையாக ரூ 35 ஆயிரம் அளிக்கிறது.

---

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

விலே பெரிய மருது, சின்ன மருது இவர்களின் திருஉருவங்கள் உள. இவை பிற்காலத்தன என்று குறிப்பிடுகின்றனர். இன்று குன்றைக் குடியில் அருளாட்சி செய்தருளும் அடிகளார் இப்பெரு மக்களின் நினைவால் பலபணிகள் ஆற்றி வருகின்றார். இப்பெருமக்கள் பெயரால், கைக்குத்தல் அரிசி நிலையம் ஒன்றும் செயல்படுகின்றது. முருகன் உள்ள அளவும், மருதுபாண்டியர் புகழ் மறையாது. மருதாபுரி என்ற ஊரணியும் மருது பாண்டியரை நினைவூட்டுகின்றது. எழுச்சி பெற்று நிற்கும் குன்றக்குடி முருகன் கோயில் மருதுபாண்டியரை என்றும் நினைவூட்டும். குன்றக்குடி மலை மீது நாள்தோறும் ஏற்றுகின்ற விளக்கு மருது வீரர்களின் மங்காப் புகழ் விளக்காகும்.

# அப்பரடிகள் திருநாளைத் தொண்டு வாரமாகக் கொண்டாடுக

## அருள்நெறித் தந்தையின் சுற்றறிக்கை

மன்னியசீர்த் திருத்தொண்டு இம்மண்ணுலகெலாம் வாழ — திருதொண்டின் நெறிபரவத் தமிழகத்தில் அவதரித்த தவஞானச் செல்வர் 'திருநின்ற செம்மையே செம்மையாய்க் கொண்ட திருநாவுக்கரசர்'. 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றி'த்தாய கருத்துக்களைக் கொண்டு திகழ்ந்த புரட்சிப் பூங்கா. சைவத் தமிழ் உலகிற்குச் சமணம் இழைத்த தாங்கொணாக் கொடுமைகளையெல்லாம் தகர்த்தெறிந்து, பல்லவ அரசின் ஆதிக்க உணர்வை வன்மையாக எதிர்த்து, 'நாமர்க்கும் குடியல்லோம்' என்று விடுதலைமுரசு கொட்டிய விடுதலை வீரர். அன்பாலே மக்கள் குலம் இணைந்து வாழும் அருள்நெறியைத் தோற்றுவித்த அருள் பழுத்த நெஞ்சினர். சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் ஓர் இணைப்புப் பாலத்தை உருவாக்கிய சால்பினர். வாடப் பல புரிந்து வாழ்வை விழலாக்கும் மூடக் கருத்துக்களை வன்மையாகச் சாடிய சீர்திருத்தச் செம்மல். செந்தமிழ் விரகராம் திருநாவுக்கரசர் அவதரித்த தெய்வத் திருநாட்டில் பிறந்து வாழக் கொடுத்து வைத்த நாம் பெறற்கரும் பேறு பெற்றவர்கள் என்றால் மிகையாகாது திருநாவுக்கரசர், மனிதகுல ஒருமைப்பாட்டையும், மனிதகுலம் வாழ்வாங்கு வாழும் நெறிமுறையையும் ஏழாம் நூற்றாண்டிலேயே வலியுறுத்திய இணையற்ற மேதை. சைவத் தமிழ் உலகிற்குப் புத்துயிரூட்டிய அந்தச் சித்தர் அவதரித்த திங்கள் சித்திரைத் திங்கள். சித்திரை சதயம் அந்த அருளாளர் அவதரித்த நன்னாள். சைவத் தமிழ் உலகம், குறிப்பாக, 'மேன்மை கொள் சைவ நீதி' மேதினியெல்லாம் விளங்கப் பணிபுரியும் நமது அருள்நெறித் திருக்கூட்டமும் அருள்நெறித் திருப்பணி மன்றமும் அதனைச் சார்ந்த கல்வியகங்களும் அந்த அருளாளரின் திருநாளைத் தனிப்பெரும் திருநாளாகக் கொண்டாடுவது தமிழர்தம் வாழ்வில் ஒரு புத்தொளியை — புத்துணர்வைத் தோற்றுவிக்கும்—விசையொடிந்த தமிழர்களிடத்தே வன்மை ஊட்டும். இவற்றிற்கெல்லாம் மேலாக அன்பு செழுமிய வாழ்க்கை நெறி அவனியில் பரவும். வருகிற சித்திரைத் திங்கள் 14-ஆம் நாள் 26-4-65 திங்கட்கிழமை அத் தமிழர் தலைவரின் திருநாள் வருகிறது.

எனவே, நமது அருள்நெறித் திருக்கூட்டம் அத்தொண்டின் வாரத்தைத் தமிழகம் எங்கும் கொண்டாட வேண்டும்--சமய உலகம் மீண்டும் வலிவும் பொலிவும் பெற்று விளங்குமாறு செய்யவேண்டும் என்று

(9-ம் பக்கம் பார்க்க)

### சண்முகநாதன் பங்குனி உத்திரம்

பிரான்மலை வகை ஐந்து கோவில் குன்றக்குடித் தேவாலய ஸ்ரீ சண்முகநாதப் பெருமான் பங்குனி உத்திரத் திருவிழா 8-3-65ல் தொடங்கி 17-3-65ல் நிறைவுற்றது.

15-3-65ல் தெப்பமும் வெள்ளித்திருரதக் காட்சியும் நடைபெற்றன. 16-3-65ல் திருத்தேரில் ஸ்ரீ சண்முகநாதப் பெருமான் உலா எழுந்தருளினார் 17-3-65ல் வையிராபுரியில் தீர்த்தோத்சவமும், இரவு மயிலாடும்பாறையில் மகோத்சவமும் நடைபெற்றன. 13-3-65 முதல் 17-3-65 முடிய திருக்கோளக்குடி சுப்பிரமணியம் குழுவினரின் நாதசுரக் கச்சேரி நடைபெற்றது. 16-3-65ல் திரு. இராமசுப்பையா குழுவினரின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. விழா நாட்களில் மலைக் கோபுரத்தில் மின்விளக்குகள் சிறப்புற அலங்கரிக்கப் பெற்றிருந்தன.

---

## மண்ணும் விண்ணும்

தவத்திரு அடிகளார் அவர்களின்

தொடர் சொற்பொழிவு

அடுத்த வாரம் வெளிவரும்.

# தமிழகம்

**அன்பாலே மக்கள்குலம் இணைந்து வாழும்**
**அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்**

மலர் 6] 10—4—65 [இதழ் 17


## ஆண்டவன் காப்பாற்றுவானாக!

மனிதர்கள் அறிவால் வளர்ந்து வருகின்றனர், அன்பால் இணைத்து வருகின்றனர். பாரில் வளம் பெருகுகின்றது. பண்பாடு, அருகி வருகிறது. எங்கு நோக்கினும், தனி மனித வாழ்க்கையாயினும் சரி, சமுதாய வாழ்க்கையாயினும் சரி, நாட்டு வாழ்க்கையாயினும் சரி, ஏன்? சர்வ தேசீய வாழ்க்கையிலும்கூடப் பகைமைக் காற்றே வீசுகிறது. நாகரிகமற்ற மறைவான பழிவாங்கும் செயல்களும் ஆரோக்கியமற்ற போட்டிகளுமே மலிந்து வருகின்றன. இந்நிலைமை வளர்ந்து வளர்ந்து கிராமங்களில் குழுச் சண்டைகள், நாட்டில் இன மொழிச் சண்டைகள், உலக அரங்கில் ஆதிக்கச் சண்டைகள் வளர்ந்து வருகின்றன. அமைதியான சமாதான வாழ்க்கைக்கு இடையூறுகள் ஏற்படுகின்றன. குறிப்பாக, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் நிலை அன்றாட கவன ஈர்ப்புக்கு உரியதாக இருக்கின்றது. மூன்றாவது உலகப் போரின் நிலைக்களமாக தென்கிழக்காசியா அமைந்து விடுமோ என்ற அச்சம் ஏற்படுகின்றது. வியட்நாம்-போர் நிகழ்ச்சிகள் இதற்கு முன்னோடியாக அமைந்து விடுமோ என்று அச்சம் ஏற்பட்டுள்ளது. அத்தோடு, மக்களாட்சியின் பேரால், தன்னிச்சைப் போக்கும் ஆதிக்க வெறியும் பிடித்துள்ள கம். சீன அரசின் நடவடிக்கைகள் நல்லவைகளாக இல்லை. உலகத்திற்கே சமாதானத்தை வழங்குகின்ற பாரதத்தின் எல்லையில் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து தொல்லை தருகிறது. உலக நாடுகளின் பேரவையில் சீனாவும் ஒரு நாடாக இடம்பெற வேண்டும் என்று பரிந்து பேசிய பாரதத்தின் எல்லையில் ஆக்ரமிப்புச் செய்து கொண்டிருக்கிறது. அத்தோடு, பாரதத்தின் உள்நாட்டில் குழுக்களைக் கலைத்துக் கைக்கொண்டு குறும்பு செய்கிறது. நம்மோடு சண்டை போடுவதைத் தவிர வேறு இலட்சியமே யில்லாத பாகிஸ்தானோடு கூடிக் குலவுகிறது. இந்தியப் பேரரசுக்கு எதிராக இயங்கும் ஷேக் அப்துல்லாவை இந்தியாவிற்கு வெளியில் சீனப் பிரதமர் சூ-என்-லாய் சந்திக்கிறார். இத்தகு செய்திகள் நமக்கு வேதனை தருகின்றன. வேதனைப் படுவதால் என்ன பயன்? நாட்டைக் காப்பாற்றும் முயற்சியில் விழிப்புடன் செயல் படவேண்டும். இத்தகு அரசியல் சிக்கல்கள் தீருகிறவரை எந்தவிதமான உள்நாட்டுப் பிரச்சனைகளுக்கும் மக்கள் மன்றத்தில் முதலிடம் தரக்கூடாது. வலிமைமிக்க — ஒருமைப்பாடுடைய பாரதத்தினாலேயே இந்தத் தீமைகளை எதிர்த்து நிற்க முடியும்! நாட்டில் ஒன்றுக்குப் பத்தாக உற்பத்தியைப் பெருக்கி, நாட்டின் செல்வ வளத்தைக் காப்பாற்றி நாட்டின் பாதுகாப்புக்குத் தொண்டுகள் செய்ய முன்வர வேண்டும். மேலும், நம்முடைய பாரம்பரியம் ஆத்ம சக்தியில் நம்பிக்கையுடைய பாரம்பரியம். நாம் ஒவ்வொருவரும் அன்றாடம் செய்யும் பிரார்த்தனையில் மனித குலத்தில் இன்ப அன்புணர்ச்சி பெருகி வளர்ந்து சமுதாயம் தழைத்தினிது வாழ வேண்டும் என்று பிரார்த்தனை செய்ய வேண்டும். ஆண்டவன் நல்வழியில் நம்மை நடத்திக் காப்பாற்றுவானாக!

— அடிகளார்.




# நிலத்தியல்பு

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மனித வாழ்க்கையின் சிறப்பியல்புகள் உணர்வுகளாலும் குணங்களாலும் அமைவனவேயாம். பல கற்கள் ஒன்றின் மீதொன்றாக அடுக்கப் பெறுவதால் சுவர் எழுந்து, வீடு உருவாகிறது. அவ்வீட்டின் நிழல் வாழ்வதற்கு இனிமையாக இருக்கிறது. பாதுகாப்பாக இருக்கிறது. அமைதியும் அளிக்கிறது. அது போல, பல்வேறு வகைப்பட்ட நல் உணர்வுகளாலும், குணங்களாலும் வளர்ந்த மனிதர்களின் வாழ்க்கை சமுதாயம் என்ற கட்டிடத்தை எழுப்புகிறது. அவ்வாறமைந்த சமுதாய அமைப்பு இனிய அமைதிகலந்த வாழ்க்கை அமைப்பைச் சமுதாயத்திற்குத் தருகிறது. நற்குணங்களிலும்கூட ஒன்றிலிருந்து தொடர்ச்சியாக பல நற்குணங்களை வளர்க்கிற தாய்மை நிலையுடைய நற்குணமுண்டு. அழுக்காறாமை, அதாவது- பொறாமைப் படாதிருத்தல் ஒரு முதனிலைத் தாய்மை நற்குணம். அழுக்காறாமையை மேற்கொண்டொழுகுவதன் மூலம் அவாவை அறுக்கலாம். ஆசைகளினின்று விடுதலை பெறலாம். ஏனெனில், ஆசையின் தாயே அழுக்காறு. ஆசையிலிருந்து விடுதலை பெறுவதால், வெகுளியினின்றும் விடுதலை பெறலாம். வெகுளியின் விலகினால் இன்னாச் சொற்களைப் பேசல், ஒறுத்தல் முதலிய பல்வேறு தீச்செயல்களினின்றும் விடுதலை பெறலாம். அழுக்காறு கொள்ளுதல் நரகத்தை இந்த நிலவுலகத்தில் உருவாக்குவதையே ஒக்கும்.

அழுக்காறு கொண்டவரை மட்டும் அழிப்பதில்லை. யாரை நோக்கிக் கொள்ளப் படுகிறதோ அவர்களுக்கும் தீங்கு விளைவிக்கிறது. முடிவில் சமுதாயம் முழுதுமே பற்றி எரிந்துவிடும். தன்னைக் கொண்டவரையும் அழித்து, செலுத்தப் படுபவரையும் அழித்து சமுதாயத்தையும் அழிக்கின்ற பேராற்றல் அழுக்காற்றிற்குண்டு. அதனால், பெறுதற்கரிய உயர்ந்த மாமேதைகளுக்கும் மகாத்மாக்களுக்கும் கூட துன்பம் விளைவிக்கப் படுகிறது. ஏன்? கடைசியில் அவர்களை இழந்தே விடுகின்றோம். உலக வரலாற்றில் நிகழ்ந்துள்ள போர்கள் யாவற்றுக்கும் அடிப்படை அழுக்காறே யாகும். இயேசு, நபிகள், சாக்ரடீஸ் அண்ணல் காந்தியடிகள் ஆகியோரை எல்லாம் காலத்திற்கு முந்தியே நாம் இழந்ததற்குக் காரணம் அழுக்கறேயாகும். அதனலன்றோ, எந்த நற்குணம் இருந்தாலும், இல்லையாயினும் அழுக்காறாமை ஒன்றைப் பெற்றிருப்பது பெறும்பேறு என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

திருவள்ளுவர் அழுக்காறாமை என ஓர் அதிகாரமே வகுத்து பத்துக் குறட்பாக்களில் அழுக்காற்றின் தீமையை விளக்குகின்றார். உலகியல் வழக்காற்றுச் சொல்லால் அழுக்காற்றை 'பாவி' என்று ஆத்திரத்தோடு குறிப்பிடுகின்றார் திருவள்ளுவர்.

"அழுக்காறு எனஒரு
பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்"

என்பது திருக்குறள். பாவங்களுக்கெல்லாம் காரணமாக இருப்பதால் அழுக்காற்றைப் 'பாவி" என்று குறிப்பிடுகின்றார். அழுக்காறு வேறு—பாவி வேறல்ல, என்ற கருத்தை விளக்குவதற்காக 'என ஒருபாவி' என்று குறிப்பிட்டிருக்கின்றார். சில தீமைகளை யாரை நோக்கிச் செலுத்தப் படுகிறதோ அவர்களுக்கே - - செலுத்துவோர்க்குத் தீமைதராது செலுத்தப்படுவோர்க்கே தீமைதரும். அழுக்காறோ பெரும்பாலும் செலுத்துவோர்க்கே அதிகத் தீமைதரும். அழுக்காற்றின் நிலைக்களன்கள் பெரும்பாலும் செல்வமுடைமை, அறிவுடைமை, புகழுடைமை ஆகியனவாம். இவற்றை, மற்றவர்கள் பெற்று விளங்குவதைக் கண்டு மனம் பொறுக்க மாட்டாமலும் அவற்றை அவர்களைப் போல நன்கு முயன்று பெறத் தமக்கு ஆற்றல் இல்லாமையாலும் தோன்றுவதே அழுக்காறு. அழுக்காற்றின் காரணமாக பிறருடைய செல்வம், அறிவுடைமை, புகழுடைமை ஆபியவற்றிற்குக் குற்றம் குறைகளைக் கற்பித்து அழுக்காற்று நெஞ்சுடையோர் களங்கப்படுத்துவர். இதன்விளைவு, தன்முயற்சியை அழித்துக் கொள்ளுதல், பிறர் முயற்சிக்கும் ஊறு விளைவித்து அழித்தல் பொதுவில் — முடிவாக, முன்னேற்றமும் ஆக்கமும் தடைபடுகின்றன. இதனை விளக்க வந்த திருவள்ளுவர் 'திருச் செற்றுத்தீயுழி உய்த்துவிடும்' என்றார். அழுக்காறுடையான் ஒருவன் செல்வத்தைப் பெறுதற்குரிய முயற்சிகளில் ஈடுபடமாட்டான். அவனுடைய முழுநேர வேலை குற்றங்காணல்,. தூற்றல், தீங்கு விளைவித்தல் ஆகிய

னவே இத்தீயவரிடம் செல்வம் எப்படிச் சேரும்? ஆதலால் செல்வத்தை அழித்து என்றூர். செல்வம் இன்மையின் காரணத்தாலும், அழுக்காற்றின் காரணத்தாலும் பல்வேறு தீச் செயல்களைச் செய்வதால் நரகத்திற்குச் செல்ல ஏதுவாகிறது. இதனைத் தீயுழி உய்த்துவிடும் என்றூர். இம்மைக்கு வேண்டிய செல்வம், மறுமைக்கு வேண்டிய வீடு இரண்டையும் கெடுத்தலால் அழுக்காறு கொடுமையினும் கொடுமையானது. வள்ளுவரே 'பாவி' என்று வசைபாடுவாராயின் நம்நிலை என்ன?

அழுக்காறு கொள்ளுதல் தீது. முற்றிலும் உண்மை — முக்காலும் உண்மை. எந்த ஒரு தீமையும் தோன்றுமல் தடுப்பதும் பாதுகாக்க வழிவகை யுண்டல்லவா? அத்தீமை தோன்றுமல் தடுப்பதும் சமுதாய நெறியில் மிகச் சிறந்ததாகும். கயவர்களின் அழுக்காறு மாற்ற முடியாதது அவர்கள் கொல்லத்தான் பயன்படுவார்கள். ஆனுலும், சாதாரண—நடுத்தர மக்களிடமிருந்து அழுக்காற்றை அகற்ற உடையோர் முயன்ருல் முடியும். அழுக்காறு கொள்ளுதல் எப்படித் தீதோ அப்படியே பிறர் எளிதில் அழுக்காறு கொள்ளும்படி நடந்து கொள்ளுதலும் தீதாகும்.

அதனுல் செல்வம் உடைமையினும் எளிய வாழ்க்கை—கொடுத்து உவந்து — ஒப்புரவு அறம் பேணி வாழ்தல் அவசியம். அறிவுடைமையில் தன்னடக்கம் தேவை. புகழை விரும்பாமல் அடக்கமாய் வாழ்தல் அவசியம். பிறர் புகழ்ந்து கூறும் சந்தர்ப்பங்களை யெல்லாம் தவிர்க்க முயற்சிக்க வேண்டும். புகழ்ச்சியை வெறுக்க வேண்டும். இங்ஙனம் வாழ்ந்தால் இல்லாதோரிடம் அழுக்காறு எழாமல்—தோன்ருமல் தவிர்க்கலாம். காரணம் அங்கு இன்மை அவ்வளவு பெரியதாகத் தோற்றம் அளிக்காது.

அழுக்காருமைக் குணத்தை மேற்கொள்ள வேண்டுமாயின் அதற்கு முதல் முயற்சி மற்றவர்கள் எல்லாவற்றையும் பெற்று வாழவேண்டும் என்று விரும்புதல் பிறர் இன்பத்தில் தான் மகிழும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். காலப் போக்கில் அழுக்காறு அகலும்—அருளியல் தோன்றும்!

அழுக்காறு எனஒரு பாவி
திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

—குறள்

# நமது வழியில்...

''தமிழகத்தில் இந்திப் பிரச்சார சபைகள் இருப்பது போல, வடக்கே தமிழ்ப் பிரச்சார சங்கங்கள் ஆங்காங்கே நிறுவி, தமிழ் தெரியாத பிறமொழியாளர்களுக்குத் தமிழ் சொல்லிக்கொடுக்க வடக்கில் வாழுகின்ற தமிழர்கள் முன்வர வேண்டும்; அதுவே அவர்கள் தமிழுக்குச் செய்யும் தனிப் பெருந்தொண்டாகும்'' என்று தவத்திரு அடிகளார் அவர்கள் அடிக்கடி வலியுறுத்தி வருகிருர்கள். அவர்கள் தமது வடநாட்டுச் சுற்றுப் பயணங்களில் ஆங்காங்குள்ள தமிழ்ச் சங்கங்களிலும் தமிழர் தொடர்புடைய பிற நிறுவனங்களிலும், சொற்பொழிவாற்றும் போதெல்லாம் இவ் வேண்டுகோளைவிடத் தவறியதில்லை.

அண்மையில் பத்திரிகைகளில் வெளிவந்துள்ள ஒரு செய்தி, தவத்திரு அடிகளார் அவர்களின் 'எண்ணம்' செயலாகத் தொடங்கியிருப்பதை உணர்த்துகிறது. செய்தி இதுதான்:

தமிழ்நாடு வர்த்தகக் கழகத்தின் துணைத்தலைவர் கேசவலால் காளிதாஸ் சேட் பத்திரிகை நிருபர்களிடம் கூறியதாவது:

''வட இந்தியா முழுவதும் தமிழ்ப் பிரச்சார சங்கங்களை நிறுவி, வட இந்திய மக்களைத் தமிழ் கற்கச் செய்யத் தீவிரமான ஏற்பாடுகள் நடைபெற்றுவருகின்றன. வடக்கே பரவலாக அனைவரும் தமிழ் கற்கத் தக்க ஏற்பாடுகள் செய்யத் தமிழ்ப்பிரச்சார சங்கங்கள் வட இந்தியா முழுவதும் அமைக்கப்பட்டுவருகிறது. இதற்குப் பலரும் ஆதரவு தரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேம்''

கேசவலால்காளிதாஸ் சேட் எடுத்துக் கொண்டுள்ள இம் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது. தமிழ்நாடும், வடக்கேயுள்ள தமிழர்களும், தமிழர் தொடர்புடைய நிறுவனங்களும் இம்முயற்சி வெற்றி பெற ஒல்லும் வகையெல்லாம் ஒத்துழைப்பது இன்றியமையாக் கடமையாகும்.

(5-ம் பக்கம் தொடர்ச்சி)

அன்போடு கேட்டுக் கொள்ளுகிறோம். நிகழ்ச்சிகள் கீழ்க்கண்டவாறு அமையலாம்.

1. தொண்டு வாரத்தில் அப்பரடிகளைப் பற்றிய சொற்பொழிவுகள் நடத்துதல்.
2. பள்ளிகளில் அப்பரடிகள் பாடல் போட்டி. கட்டுரைப் போட்டி, கவிதைப் போட்டி, பேச்சுப் போட்டி முதலியன நடத்தச் செய்து பரிசுகள் வழங்குதல்.
3. திருக்கோயில்களில் அப்பரடிகளுக்குச் சிறப்பு வழிபாடு செய்தல்-
4. தேவாரப் பண்ணிசையாளர்களைக் கொண்டு அப்பரடிகளின் இன்னிசைத் திருமுறைப் பாடல்களை ஓதச் செய்தல்— ஓதுவிக்கச் செய்தல்.
5. திருக்கோயில் தூய்மை செய்தல், திருக்குளங்கள் தூய்மை செய்தல், சிற்றூர் தூய்மை செய்தல் முதலிய திருப்பணிகளைச் செய்தல்.
6. வாய்ப்பற்ற ஏழைகளுக்கு உணவு வழங்குதல்.
7. சாலை அமைத்தல்—குடிநீர்க் கிணறு தூர் எடுத்தல் ஆகியவைகளைச் செய்தல்.

அருள்நெறித் திருக்கூட்டத்தினரும், அருள்நெறித் திருப்பணி மன்றக் கல்வியகங்களும், சமய நிறுவனங்களும், சமயச் சார்புடைய நிலையங்களும், தமிழ்ச் சங்கங்களும் அப்பரடிகள் திருநாளைச் சிறப்பாகக் கொண்டாடுமாறு அன்போடு கேட்டுகொள்ளுகிறோம்.



## நிலவளமும் உளவளமும்

நிலத்திற்கு உரமிட்டால் நிலவளம் பெருகுவதுபோல, மனிதனுக்குக் கருத்துணவு கொடுத்தால் அவனது உளவளம் செழிக்கும்.

—அடிகளார்.

## பெரியார் யார்?

கற்றல் கேட்டல்
உடையார் பெரியார்

—ஞானசம்பந்தர்.

செயற்கரிய செய்வார்
பெரியார்.........

—குறள்

## ஆறுமுகனாருக்குப் பொன்னாடை

பாக்காலா தமிழ் மன்றத்தின் சார்பில் 23-3-65ல் பாக்காலா மாவட்ட உயர்நிலைப் பள்ளி, தலைமைத் தமிழ்ப் புலவர் திரு. ஆர். ஆறுமுகனாருக்கு பொன்னாடை போர்த்தும் விழா நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் திரு. ஆறுமுகனாருக்குப் பொன்னாடை போர்த்தினார்கள். விழாவிற்கு திரு. அரங்கநாத முதலியார் தலைமை வகித்தார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பாராட்டுரை வழங்கினார்.

# செய்திச் சுருள்

## கோவையில் சேவை வார விழா

தமிழ்நாடு அரசிதழ் பதிவிலா அலுவலர் ஒன்றிப்புக் கோவை மாவட்டக் கிளையின் சேவை வாரவிழா 7—3—65ல் கோவை உயர் நிலைப்பள்ளியின் முதன் மண்டபத்தில் கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. கே. வி. இராமநாதன் I.A.S. தலைமையில் நடைபெற்றது.

தவத்திரு அடிகளார் அவர்கள் விழாவிற் கலந்து கொண்டு பேருரை நிகழ்த்திச் சிறப்பித்தார்கள்.

## பெரியார் பிறந்த நாள் விழா

பெரியார் ஈ. வே ரா. அவர்களின் 86-வது ஆண்டு பிறந்த தினவிழா வல்லவாரி ஆயிங்குடி புகைவண்டி நிலையத்தருகில் 8-3-65ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவர் பெரியார் அவர்கள் கருத்துரை வழங்கினார்கள்.

## கொளஞ்சியப்பர் தேவஸ்தானம் பங்குனி உத்திரம்

மணவாளநல்லூர் ஸ்ரீ கொளஞ்சியப்பர் தேவஸ்தான பங்குனி உத்திரப் பெருவிழா 8-3-65 முதல் 17-3-65 வரை நடைபெற்றது. பங்குனிப் பெருவிழாவையொட்டி சமயச்சொற்பொழிவுகளும் இன்னிசைக் கச்சேரிகளும் நடைபெற்றன,

11-3-65ல் தவத்திரு அடிகளார் அவர்கள் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்கள்.

## தேரழுந்தூர் கம்பர் விழா

தேரழுந்தூர் ஆடருவிப் பெருமான் தேவஸ்தானத்தின் சார்பில் நடைபெற்ற கம்பர் விழாவில் 19-3-65ல் தவத்திரு அடிகளார் அவர்கள் கலந்துகொண்டு உரையாற்றினார்கள். திரு. எம். மாணிக்கவேலர் தலைமை வகித்தார். திரு.கருத்திருமன், எம்.பி அனைவரையும் வரவேற்றார். திரு.ரா. கிருஷ்ணசாமி நாயுடு எம்.எல்.ஏ. விழாவைத் துவக்கிவைத்தார். மற்றும் பலர் விழாவிற் கலந்து கொண்டனர்.

## சர்வோதய விழா: பட்டிமன்றம்

டால்மியாபுரம் காந்தி மன்ற சர்வோதய விழா 19-3-65ல் தொடங்கியது. திரு. ரா. சுப்பிரமணியம் அனைவரையும் வரவேற்றார். தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில், காந்தியடிகளிடம் சிறந்து நின்றது தலைமைப்பண்பா? தொண்டுப் பண்பா? என்ற தலைப்பில் பட்டிமன்றம் நடைபெற்றது.

தலைமைப் பண்பே என்ற கட்சிக்கு திரு. ராதாகிருஷ்ணன் தலைமை வகித்தார். திரு. எஸ். பூமிநாதன், திரு. வி. துரைசாமி திரு. சா. பெரியசாமி ஆகியோர் வழிமொழிந்து பேசினர். தொண்டுப்பண்பே என்ற கட்சிக்கு புலவர் மு. கணபதி தலைமை வகித்தார். திரு. சத்தியசீலன், திரு. சிங்கராயர், புலவர் திருநாவுக்கரசு ஆகியோர் வழிமொழிந்து பேசினர். திரு. அ. பழனிவேல் நன்றி தெரிவித்தார்.

## நாடக நடிகர் சங்கம்

புதுக்கோட்டை நாடக நடிகர் சங்க ஆண்டு விழாவும், நாடகப் பேராசிரியர் டி. டி. சங்கரதாஸ் சுவாமிகளின் 16-வது நினைவு விழாவும் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. டி. கே. சண்முகம் விழாவைத் தொடங்கி வைத்தார். நடிகர் டி. கே. சண்முகத்திற்கு நாடக நடிகர் சங்கச் சார்பில் தவத்திரு அடிகளார் அவர்கள் பொன்னாடை போர்த்தினார்கள்.

திருவாளர்கள் தியாகராச காடுவெட்டியார் எம்.எல்.ஏ., கல்யாணசுந்தரம் எம்.எல்.ஏ. கணபதி சாஸ்திரி, திருமதி சிவபிருந்த தேவி ஆகியோர் பேசினர். திரு. பி. தொண்டைமான் வரவேற்றார்.

குடியாட்சி வளர்ந்த வரலாறு:

# பண்டைய குடியாட்சி முறைகள்

பேராசிரியர்
பா. சூரியநாராயணன்

ரோமானியர்களுடைய பண்பாடுகளையும், மனப்பான்மையையும் பற்றி முன்னர்க் குறிப்பிட்டோம்; அவற்றின் மூலமாக அவர்கள் அரசு, அரசாங்கம் ஆகியவற்றைப் பற்றிக் கொண்டிருந்த கருத்துக்களைப் பற்றியும் சிறிது கூறினோம். பொதுவாக 'அரசு' என்பதைப் பற்றி அவர்கள் கொண்டிருந்த கருத்தினின்றும் நமக்குக் கிடைக்கக் கூடிய, குடியாட்சிப் போக்கில் அமைந்த சில கருத்துக்களை நாம் இங்கு சுட்டிக் காட்டி, பின்னர் அவர்கள் முதன் முதலில் அமைத்த குடியாட்சியின் இயல்புகளை விளக்குவோம்.

(1) அரசாங்கம் என்பது தனது அதிகாரத்தைத் தன்னுடைய மக்களுடைய ஆதரவினின்றும் அல்லது ஒப்புதலினின்றும் தான் பெறுகிறது; மக்கள் தரும் ஆதரவைத் தவிர, அரசாங்கத்தின் அதிகாரத்துக்கு வேறு எதுவும் ஆதாரமாக இருத்தல் இயலாது.

(2) அரசாங்கம் தனது குடிமக்கள் யாவருடைய நலத்தையும் பேணிக்காத்தல் வேண்டும்; பொதுமக்களுடைய நலத்தைக் காத்தற் பொருட்டு, அவர்களுடைய உரிமைகளில் ஓரளவு அரசாங்கம் தலையிட்டுத் தடை செய்வது இன்றியமையாததாகிறது. எனினும் குடிமக்கள் என்போர் திட்டவட்டமான உரிமைகளைப் பெற்றிருப்பவர் என்றே கருதப்படுதல் வேண்டும்.

இந்த இருவகைக் கருத்துக்களும், இக்காலக் குடியாட்சிக் கருத்தை ஒத்து இருக்கின்றன. எனினும், பண்டைய ரோமானியர், குடியாட்சி, பிரபுக்களாட்சி, குடியாட்சி முதலிய வகைகளில் தம் அரசாங்கம் எந்த வகையைச் சேர்ந்தது என்று அறிவதில் அவ்வளவு கவனம் செலுத்தவில்லை. கி. மு. முதலாம் நூற்றாண்டில் ரோமில் வாழ்ந்தவரும், நாவலரும், வழக்கறிஞருமாகிய மார்க்கஸ் டல்லஸ் சிசரோ என்பவரும் (கி. மு. 106—கி. மு. 43), வேறுசில தனிப்பட்ட ரோமானியரும், குடிகளுள் ஒவ்வொருவரும் அரசியல் அலுவல்களைச் செய்வதற்குத் தகுதியுடையவரெனவும், எனவே அவர்களுக்கு அரசாங்க அலுவல்களில் பங்கு இருத்தல் வேண்டுமெனவும் கருதினர். இவர்களுடைய கருத்து அதீனியர் குடியாட்சி முறையைப் பற்றி எண்ணிய கருத்தை ஒத்தது.

ஆனால் பொதுவாகப் பார்க்குமிடத்து, ரோமானிய மக்கள் பெரும்பாலும் கொண்டிருந்த அரசியற் கருத்து என்னவென்றால், 'அரசாங்க அதிகாரிகள் மக்களால் அதிகாரம் கொடுக்கப் பெற்று (அதாவது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு), சட்டம் இயற்றும் போது அந்த அதிகாரிகள் மக்கள் மன்றங்களின் உடன்பாட்டையும் பெற்று ஆட்சி செய்தால் போதும்' என்பதே ஆகும். இத்தகைய ஆட்சி முறையை-மக்களால் குறிப்பிட்ட காலத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரிகளின் (Magistrates) ஆட்சிமுறையை—அமைத்துக் கொள்ளுவதோடு, அவர்கள் மன நிறைவு எய்தினார்கள். ரோமானியர், அதீனியர்களைப்போல தங்கள் ஆட்சி அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்த பின்னரும், தங்களுக்குள் முறை வைத்துக் கொண்டு, திருவுளச்சீட்டு முறைப்படி குறுகிய கால அளவுக்கு, அன்றாட ஆட்சி அலுவல்களில் பங்கும் பொறுப்பும் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. அரசியலைப் பொறுத்த வரையில் ரோமானியருக்கும், அதீனியருக்குமிடைய காணப்பட்ட இவ் வேறுபாடான மனப்பான்மையை நாம் மனத்தில் இருத்திக் கொண்டால், ரோமானியர் அதீனியரைப்போல் நேர்முகக் குடியாட்சி முறையை உருவாக்காமலிருந்ததற்குக் காரணம் விளங்கும். ஒருவரை ஆட்சி அலுவலுக்குத் தகுதியானவரென்று மக்கள் தீர்மானித்து அவரைத் தேர்தல் முறையின் மூலமாகத் தேர்ந்தெடுத்து அமர்த்திவிட்டால் ஆட்சியைப் பற்றிய எல்லா விவரங்களையும், செயலறிவு உடைய அந்த அலுவலரே உணர்ந்து செய்வதற்கு சட்டப்படி உரியவர் ஆவார்; எனவே சட்டப்படி அவ

ருக்கு உரிய எல்லா அலுவல்களிலும்,—அந்த அலுவல்கள் பெரியவை ஆயினும் சரி, சிறியவை ஆயினும் சரி,—குடிமக்கள் தலையிடுதல் கூடாது. இதுவே ஆட்சி இயலைப் பற்றி ரோமானியர் கொண்டிருந்த எளிமையான கருத்து ஆகும்.

இதனை ஒட்டியே அவர்கள் கி.மு. 753 முதல் கி.மு. 44 வரை பல வகையான ஆட்சி வகைகளை அமைத்தனர்.

முடியாட்சி; (கி.மு. 753 முதல் கி.மு. 510 வரை):— பண்டைய ரோமானியரால் பாரம்பரையாக ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபு அல்லது வழக்கத்தின்படி ரோம நகரமானது, அதனை முதன்முதலில் ஆட்சி செய்த ராமுலஸ் என்பவனால் நிறுவப்பட்டது. பண்டைய ரோமானியர் தங்களுடைய வரலாற்று நிகழ்ச்சிகளையெல்லாம் ஆண்டுக் கணக்கின்படி குறிப்பிடும்போது, அந்நிகழ்ச்சிக்குரிய ஆண்டுகளைத் தங்களுடைய நகரமானது நிறுவப்பட்டதாகக் கொள்ளப்பட்ட ஆண்டிலிருந்தே கணக்கிட்டனர். அவ்வாறு அவர்கள் தங்களுடைய நகரத்தின் தோற்றக் காலமாகக் கொண்ட ஆண்டை, வரலாற்றாசிரியர்கள் கிறிஸ்து பிறந்த ஆண்டிலிருந்து கணக்கிட்டுப் பார்த்து, அதைக் கிறிஸ்துவுக்குமுன் (கி.மு.) 753-ம் ஆண்டு எனக் குறிப்பிட்டனர். முடியாட்சிக் காலத்தில் ரோம நகரத்தில் அரசர்களாக இருந்தவர்கள் ராமுலஸ் (கி.மு. 753 - கி.மு. 716), நியூமா பாம்பிலியஸ் (கி.மு. 715-கி.மு. 673), டல்லியஸ் ஹாஸ்டிலியஸ் (கி.மு. 673-642), அங்கஸ் மார்ஷியஸ் (கி.மு. 642-616) டார்க்வினியஸ் பிரிஸ்கஸ் (கி.மு 616-578), செர்வியஸ் டல்லியஸ் (கி.மு. 578-534), டார்க்வினியஸ் சுப்பர்பஸ் (ஆணவம் மிக்க டார்க்வினியஸ் (கி.மு. 534-510) முதலியோர் ஆவர்.

முடியாட்சிக் காலத்தைப் பற்றிய வரலாறு முழுவதும், ரோம் குடியரசான பின்னரும் கி.மு. 390-ம் ஆண்டு வரையிலுமுள்ள அதனுடைய வரலாறும் கற்பனைக் கதைகளாலேயே பெரும்பாலும் ஆக்கப்பட்டிருக்கின்றன; குடியாட்சி வளர்ந்த பொதுவான ஓர் வரலாற்றிலே அவைகளை நாம் குறிப்பிட வேண்டுவதில்லை; அவற்றில் காணப்படும் ஓரளவு உண்மைகளை ரோமானிய வரலாற்றாசிரியர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.

ரோம் நகரமானது ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஓர் ஆளினால் உண்டாக்கப்படவில்லை; முதலில் பாலட்டைன் குன்றில் லட்டீன்களில் ஓர் பிரிவினர் குடியேறியிருந்தனர்; பின்னர் வெவ்வேறு காலங்களில் அதைச் சுற்றியுள்ள குன்றுகளில் சபைன் கூட்டத்தவர் சிலரும், மற்றும் சிலரும், குடியேறி லட்டீன்களோடு இணைந்து ஒரே நகரராக வாழ்ந்தனர். மற்ற எல்லா இந்தோ-ஜெர்மனிய மக்களையும் போல ரோம் நகரத்தில் வாழ்ந்த லட்டீன் குடிமக்களும் அரசர் ஓர் முதியோர் சபை அல்லது செனட்சபை, பொதுமக்கள் சபை, அல்லது கமிஷியாக்யூரியாட்டா முதலிய அமைப்புக்களைக் கொண்ட அரசியலை நிறுவினர். இச்சபைகளையெல்லாம் ராமுலஸ் நிறுவினான் என்ற கதை நம்பத்தக்கதன்று. அதேபோல ரோமானிய சமுதாயத்தைப் பட்ரிஷியர் எனப்பட்ட (Patricians) பிரபுக்கள் வகுப்பாகவும், சாதாரணப் பொதுமக்களடங்கிய பிளபியர் (Plebeians) வகுப்பாகவும் ராமுலஸ் பிரித்தாரென்பது கற்பனை. இப்பிரிவு பல ஆரிய சமுதாயங்களில் காணப்படுகிறது. மேலும், ரோமானியரைச் சிலகாலம் ஆண்ட எட்ரஸ்க்கன் மக்களிடமிருந்தே ரோமானியர், கட்டிடக் கலை, தங்களுடைய ஆடைவகை, சமயக் கருத்துக்கள், வழிபாட்டு முறை, பொழுது போக்கு வகை (இருமனிதர் கருவிகளோடு ஒருவரையொருவர் எதிர்த்து ஒருவர் மடியும் வரை போரிடுதல்—Gladiatorial contests) முதலியவற்றைக் கற்றறிந்தனர்.

(தொடரும்)

## உவமை நயம்

என்ற தொடரில்
தவத்திரு அடிகளார்
எழுதும் கட்டுரை
17...4...65
தமிழகத்தில்
தொடர்ந்து
இடம் பெறும்

வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி, இராமநாதபுர மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.